# "ஒற்றுமை"

"பிறவிப் பெருங்கட னீந்துவர் நீந்தார்
இறைவ னடிசேரா தார்."—திருக்குறள்.

புஸ்தகம் V
Vol. V

1925ஸு பிப்ரவரிமீ

சஞ்சிகை 4
Issue 4

## தோத்திரம்

---

விண்ணாளுந் தேவர்க்கு மேலாய வேதியனை,
மண்ணாளு மன்னவர்க்கு மாண்பாகி நின்றானைத்,
தண்ணார் தமிழ் அளிக்குந் தண்பாண்டி நாட்டானைப்
பெண்ணாளும் பாகனைப், பேணு பெருந்துறையிற்
கண்ணார் கழல் காட்டி நாயேனை ஆட்கொண்ட
அண்ணாமலையானைப், பாடுதுங், காண் அம்மானாய்!

மணிவாசகர்.

# தாயைப் போற்று

சங்கநிதி பதுமநிதி யிரண்டுந் தந்து
தரணியொடு வானாளத் தருவரேனும்
மங்குவார் அவர்செல்வம் மதிப்பேம் அல்லேம்
மாதமிழுக் கேகாந்தர் அல்ல ராகில்
அங்கமெலாம் குறைந் தழுகுதொழு நோயராய்
ஆவுரித்துத் தின்றுழலும் புலையரேனும்
தங்குபுகழ்ச் செந்தமிழ்க் கோர் அன்பராகில்
அவர்கண்டீர் யாம் வணங்குங் கடவுளாரே.

* * * * *

தேயப்பற்றும் பாஷைப்பற்றும் இல்லாதார் புவியில்வாழ் வது புவிச்சுமை என்பது அறிவாளிகள் எண்ணம்.

* * * * *

பாஷைத் தொண்டு ஈசத்தொண்டு தேயத்தொண்டு ஆகதொண்டு மூன்றிலும் பாஷைத்தொண்டே சிறப்பு வாய்ந்தது. ஏனெனில் பாஷையின் வளர்ச்சி யிருப்பின் ஏனைய இரண்டும் தானே வந்துசேரும். மொழிவளர்ச்சி யின்றேல் எதுவும் ஏற்படா. ஏற்படினும் நிலையா. மண் குதிரையை நம்பி ஆற்றில் இறங்கும் கதைபோலாம்.

* * * * *

ஒரு காலத்தில் நெப்போலியன் தன் ஆளுகைக்குள் ளிருந்த ஒரு கிராமத்தைச் சுற்றிப் பார்க்கப்போனான். போயிருந்த காலத்தில் ஒரு பள்ளிக்கூடத்தில் நுழைந்தான். அந்தப் பள்ளிக்கூடத்தில் வாசித்துக்கொண்டிருந்த ஒரு

பெண்ணைத் தனியாகக் கூப்பிட்டு "பெண்ணே, உனக்கு வேண்டியதைக் கேள் தருகிறேன்" என்ருன். உடனே அந்தப்பெண் 'எங்கள் தாய்ப் பாஷையை கட்டாயப் பாடமாக வைக்கவேண்டும்' என்று சொல்லிற்று. உடனே நெப்போலியன் அந்தப் பெண் சொல்லியவாறே செய்தான்.

* * * * *

மகாத்மா காந்தி ஒருகாலத்தில் தென் ஆப்பிரிக்காவில் வைத்து தமிழை எல்லா இந்தியர்களும் பேசும் பாஷையாக இருக்கவேண்டு மென்று சொல்லி யுள்ளார். தமிழின் "பழைமையும் இனிமையும் நன்கு அறிந்து சொன்னூர் போலும்.

* * * * *

தமிழ்மொழி பண்டைக்காலந் தொட்டு தனிமொழியாயும் செம்மொழியாயும் விளங்கிவருகிறது. அதை நாம் புறக்கணித்ததன் பயனுக வேற்று மொழிகள் தமிழ் நாட்டில் மிகுந்து தமிழ் முதனூல்களே வெளிவரா வண்ணம் தகைத்தன. அதோடு தமிழும் பின்பு படிப்படியாக இந்த நாட்டை வென்ருேர் மொழிகளை யெல்லாம் ஒருவாறு தழுவிக் கடைசியாக ஆங்கிலமும் கலப்புண்டு வேற்றுமொழிகளின் கிளைமொழியே யென மாற்ருர் வாதிக்கவும் நேர்ந்த நிலையில் நிற்கிறது.

* * * * *

தமிழுக்காக உழைக்கும் பத்திரிகைக்குத் தரும் பொருள், நஷ்டம் வீண் என்றெண்ணும் அறிவாளர்கள், பரத்தையருக்கும் கள்ளுக்கும் நாடகத்துக்கும் காப்பிக்கும் தருவது நஷ்டமென்றெண்ணுதது நம் நாடுசெய்த பாவமே.

வி.

# இலக்கண வாராய்ச்சி

---

(கண்ணபுரத்துக் கவுணியன் வெண்ணெய்க்
கண்ணனூர் எழுதியது).

(96-ம் பக்கத்துத் தொடர்ச்சி)

யகாத்தின் முன்னர் இகாம் மொழிமுதலாகி வருதல் நன்னூலாருக்கு உடம்பாடேல் "அ ஆ உ ஊ ஓ ஔ யம் முதல்" எனச் சூத்திரியார். யவனர், யுகம், யூகம், யௌவ னம் என்றற் றொடக்கத்தவெல்லாம் வருதற்குடம் பட்ட வர் யக்ஷின் என்பது போன்றவை யக்கன் என்றாங்கு வரு தற்கு உடம்பட்டிலர் என்று சாதித்தல் எள்ளியிகழ்தற் பாலதாம்.

இனி "ஆவோ டல்லதி யகரமுத லாது" என ஆசிரி யர் தொல்காப்பியனூர் சூத்திரப்படி அமைந்த பண்டைப் பனுவலின் பிரயோகங்களெல்லாம் வழுவமைந்திலவாய்க் காத்தற்குத் தான் "யவ்விற் கிய்யும்" எனச் சூத்திரித்தார்

என்னின் "நுந்தை" என்பதின் னவ்வூர்ந்த உகாத் தைக் குற்றியலுகாம் எனவும், "மருண்ம்" என்ற தன் கண்ணுள்ள மகாங் குறுகாதெனவும், 'மண்ஞாத்த' என நக ரம் ஞகரமாகும் எனவும் பல்லாருகக் கொண்டவெல்லாம் நன்னூற் கண் மாறபடலின் அஃது இன்னவற்றூற் சிதைந் தொழிதலின் பொருந்தாதென்க.

இனி 'இயக்கன்' முதலியவெல்லாம் தொல்காப்பிய விதிபற்றியே வந்த வெனவும், 'யக்கன்' முதலியவெல்லாம்

நன்னூல் விதிபற்றியே வந்தவெனவும் கொள்ளுதலே சாலப் பொருத்தமென்பது செவ்விதிற் போந்தவாறு கண்டு கொள்க.

இனி டகரவருக்கம் தகரமாகத் திரிந்து வருதலும் உண்டாதலின் "டவ்விற் கிய்யும்" எனப்பாடங்கொள்வது குற்றம்; பிறவெனின்? ஈண்டு முச்சுட்டே அதிகாரப் பட்டு வருதலின் என்க.

மற்றும் எவ்வகையானே தகரம் வருதல் பெறலாமோ வெனின் க்ஷத்திரியன், க்ஷமணன், க்ஷேமம், மீனாக்ஷி, பிக்ஷை, மநுஷன் என்னுமித் தொடக்கத் தவற்றையெல்லாம் இகரமுமாகும் எனப்பயனில்லை கொடுத்து முடியாது "இகரமும்" என் அவாய்நிலையாக முடித்தமையானும், ஸம்யுக்தாக்ஷரங்களுள் விதியினடங்கப் பெறுதவற்றைப் "பிற" என்றதனான் அடக்கிப் போந்தமையானும் "இகரமும்" என்னும் அவாய் நிலையானே முடிக்கலாம் என்பது.

இவ்வவாய் நிலையானே டகரத்தை முடித்துக்கோடல் பொருந்தாதோவெனிற் பொருந்தாது. ஒரு விதியேனும் டகரம் பெருமையானும்; யகர முதலாகும் என விதிபெற்றமையானும்; விதிபெற்றதற்குப் பின்னும் விதித்துப் போதலும், விதிபெறுததற்கு விதியாது வாளாபோதலும், அன்ன பிறவும் இலக்கணம் வகுப்பார் பெருமைக்கு இழுக்குத்தருதலானும் என்பது.

இக்கூறியவற்றானே "டவ்விற் கிய்யும்" என்றதுவே உண்மைப் பாடம் எனவும், "யவ்விற் கிய்யும்" என்றதுவே மாறுபட்ட பாடமெனவும் கண்டு கொள்க.

(இன்னும் வரும்)

---

## பம்பாய்ப் படுகொலை

### (The Malabar Hill Tragedy)

மம்டாஸ் பீகம் என்னும் வனப்புவாய்ந்த நாட்டிய மாது இந்தூர் மகாராசாவின் அபிமான ஸ்திரீயாக நெடுங் காலம் வாழ்ந்து ஒரு பெண் மகவையும் பெற்றவள். இந் தூர் மகாராசா அக்குழந்தையை அவளிடமிருந்து பிரித்து, அது இறந்து விட்டதெனக் கூறினமையினாலும் வேறும் சில காரணங்களாலும் ஏற்பட்ட மனஸ்தாபத்தினால் அம் மாது ஷை சமஸ்தானத்தை விட்டு மறைந்து ஓடினள். அவளைத்தேடிப் பிடித்து வருவதற்கு ஒரு பெரும் கூட்டம் நியமிக்கப்பட்டது. அக்கூட்டத்தின் செலவுக்காக 50,000 ரூபா வரையிற் கொடுக்கப்பட்டது. அவள் தன் தாயிடம் வசிப்பதனால் தனக்கு ஆபத்து நேரக்கூடுமென்று பம்பாயி லுள்ள போலீசாருக்குத் தெரிவித்தபின், அங்குள்ள தன வந்தருள் ஒருவராகிய மிஸ்றா அப்தூல்காதர் பௌலா வைச் சரணமடைந்து சென்ற மூன்று மாதகாலமாக அவ ரிடம் இருந்தாள். இந்தூர் சமஸ்தானத்திலிருந்து புறப் பட்ட கூட்டம் அந்நாட்டியமாதை விடும்பொருட்டு அப் தூல் பௌலாவுக்குப் பல கையொப்பமில்லாக் கடிதங்கள் வற்புறுத்தி அனுப்பியது. மிஸ்ரா பௌலாவின் நண்பர் பலர் அப் பெண்ணை விடும் பொருட்டுப் போதித்தும் அவர் அதற்கு இயைந்தாரல்லர். சில நாட்களுக்கு முன் ஒரு தினம் பௌலா என்பவர் நகரசங்கக்கூட்டத்துக்குச் சென்று இரவு ஏழுமணிவரையில் அந்த நாட்டியமாதுடன்

தனது வீட்டுக்குத் திரும்பும்போது, சிலர் மோட்டார் வண்டியிற் சென்று வழிமறித்துத்தாக்கித் துப்பாக்கிப் பிரயோகம் செய்தனர். பௌலா என்பவர் படுகாயமுற்று வைத்திய சாலைக்குக் கொண்டுபோகப் பட்டு அங்கே உயிர் துறந்தார். நாட்டியமாதின் முகத்திலும் கத்திக்காயம் ஏற்பட்டது. எதிர்த்த கூட்டத்தார் அவளை வலிந்து பிடித்துக்கொண்டு போகும் பொருட்டு தர்க்கமிடும் தருணத்தில் காத்திராவண்ணம் அங்குச்சென்ற ஆங்கிலப் போர்வீரர் அப்பாதகர்களைப் பிடிக்க முயன்றனர். எல்லோரும் ஓடி மறைந்தார்கள். ஒருவன் மாத்திரம் அந்த இடத்திலே பிடிக்கப்பட்டான். காயப்பட்டோர் வைத்திய சாலைக்குக் கொண்டுபோகப்பட்டார்கள். அப்பெண் இப்பொழுது போலீசரின் அருங்காவலிலிருக்கிறாள். போலீஸ்விசாரணை மிகவும் அந்தரங்கமாக நடைபெறுகிறது; இக்கொலையில் சம்பந்தப் பட்டார்களென இற்றைவரையில் பிடிக்கப்பட்டோர் :—இந்தூர் இராணுவப்படை மேலுத்தியோகஸ்தர், ரட்லம் சமஸ்தானத்தைச் சேர்ந்த கே. நாராயணவோரா (இவரிடம் கொலைச்சம்பந்தமான சில கடிதங்கள் காணப்பட்டன) பம்பாயில் ஓர் பழவியாபாரி, கொலையாளிகள் ஏறிச் சென்ற மோட்டர்ச் சாரதி, இந்தூர்மகாராசாவின் மெய்காப்பாளர், ஷை சமஸ்தான ஆகாயப்படை உத்தியோகஸ்தர், அரண்மனை வேலைக்காரர், இந்தூர் இரகசியப் போலிஸ்பரிசோதகர், சமஸ்தான மோட்டர் சாரதிகளிருவர் முதலானோர்கள். மிஸ்றர் அப்துல்காதர் பௌலா என்பவர் இறக்கும்போது, ஷை பெண்ணுக்கு ஒருலட்சம் ரூபா மரணசாதனம் செய்திருக்கிறாரெனவும் தெரிகிறது. (சா)

---

# அப்பூதிநாயனாரின் குருபத்தி.

(யாழ்ப்பாணம் இந்துக்கல்லூரி மண்டபத்தில்

சச்சிதாநந்தராஜயோகிகளின் பதின்மூன்றுநாட் பிரசங்கம்)

திருநாவுக்கரசுநாயனார் பல சிவஸ்தலங்களையும் வணங்கித் தேவாரத் திருப்பதிகம் பாடியபின் திருப்பழனத்தைச் சென்றடைந்தார். இங்குள்ள சிவஸ்தலம் திருவையாற்றுக்குக் கிழக்கே இரண்டுமைல் தூரத்திலிருக்கிறது இவ்வூரில் வாழை விசேடமுடையதாதலினால் இத்தலத்துக்குக் கதலிவனம் என்னும் ஒரு திருநாமமுமுண்டு. இங்குக் கோயில் கொண்டருளும் சுவாமி பெயர் ஆபத்சகாயேசுவரர். தேவி பெயர் பெரியநாயகியார். இங்குள்ள தீர்த்தம் மங்கள தீர்த்தமென அழைக்கப்படும். சமீபத்திலே திங்களூர் என்னும் ஒரு கிராமம் இருக்கின்றது. இது சந்திரனாற் பூசிக்கப் பெற்ற இடமாதலினால் திங்களூரெனப் பேர்பெற்றது.

அவ்வூரிலே, உயர்ந்த பிராமணகுலத்தில் அவதரித்தவரும், சிவனடிமறவாச் சிந்தை யுடையவரும், அடியார் பூசையைக் குறைவற நடாத்துபவரும், சிவவேடத்தில் பேரன்புடையவரும், அறுபத்துமூன்று நாயன்மாருள் ஒருவருமாகிய அப்பூதிநாயனாரென்னும் ஒருவரிருந்தார். அவர், திருமுனைப்பாடி நாட்டிலே வேளாளர் மரபிலே ஒரு அவதார புருஷர் திருவவதாரஞ் செய்தாரென்றும், திருவதிகை வீரட்டானேசுவரர் அவரைச் சூலை நோயினால் தடுத்தாட்கொண்டாரென்றும், சமணர்களால் நீற்றறையி லிடப்பெற்றும் நஞ்சூட்டப்பெற்றும் கல்லுடன்

கட்டிக் கடலில் வீழ்த்தப்பெற்றும், பின்னரும் பலவாறு இடர்ப்படுத்தப்பெற்றும், திருவருள் மகத்துவத்தினால் அவற்றினின்றும் நீங்கி, தலங்கள்தோறும் தேவாரத்திருப் பதிகம் பாடியருளிச்செய்து சைவசமயாசாரியராக விளங்கு கின்றாரென்றும் கேள்வியுற்றவுடன் திருநாவுக்கரசுநாயனா ரிடம் அத்தியந்த பக்திபூண்டு ஒழுகுவாராயினர். அவர் திருநாவுக்கரசுநாயனாரே புறச்சமய இருளைக் கெடுக்க உதித்த ஞானசூரியனென மனத்துட்கொண்டார். அவ ருடைய திருநாமத்தையே ஸ்ரீபஞ்சாட்சரமாகச் செபித்து வருவாராயினர். இவ்வப்பூதியடிகள் அவரையே தமக்குக் குருவாகவுங் கொண்டார்; ஆயினும் வாகீசரை அவர் ஒரு போதும் நேரிற் கண்டாரல்லர். தாம் அமைத்துள்ள அறச்சாலை கிணறு குளம் நிழன்மரம் தண்ணீர்ப்பந்தர் நந்தனவனம் முதலியவைகளைத் திருநாவுக்கரசு நாயனாரென்னும் திருநாமத்தினாலே விளங்கச் செய்தார். சிவனடி யார்களையும் சுற்றமித்திரர்களையும் புத்திரரையும் திருநாவுக் கரசு என்னும் திருநாமத்தினால் அழைத்து வரலாயினர்.

திருநாவுக்கரசு நாயனார் திங்களூரை அடைந்த மாத் திரத்தே ஓர் தண்ணீர்ப் பந்தரைக் கண்டார். அங்கு "திரு நாவுக்கரசு நாயனார் தண்ணீர்ப்பந்தர்" எனத் தீட்டப்பட் டிருந்தது. மற்றுமுள்ள கிணறு சோலை குளம் முதலிய வற்றிலும் அவ்விதமே பொறிக்கப்பட் டிருத்தலைக் கண் டார். அவர் அங்கு நின்றோரை விசாரித்து, அதன் உண் மையை உணர்ந்து அப்பூதியடிகளைத் தரிசிக்க விரும்பி அட்ட ஐசுவரியங்களும் குறைவின்றிப் பொலிந்து விளங் கும் அந்நாயனாருடைய திருமாளிகையை அடைந்தார். இவர் தாம் திருநாவுக்கரசு நாயனாரென அறியாத அப்பூதி நாயனார் ஓர் உத்தம சிவனடியார் இங்கெழுந்தருளினரென

நினைந்து தாண்டகவேந்தருடைய திருவடியில் வீழ்ந்து வணங்கினர். வாகீசரும் அவரை வணங்கி நிற்ப அப்பூதி யடிகள் இருகரங்களும் சிரமேற் கூப்பி "தேவரீர் இங்கு எழுந்தருள அடியேன் பூர்வத்தில் எத்தவம் இயற்றினேன், அடியேன் தேவரீருக்குச் செய்யவேண்டிய பணிவிடை யைக் கற்பிக்குக" என இரந்து கூறித்துதித்தனர். இதனைக் கேட்ட திருநாவுக்கரசுநாயனர் "தொண்டரே, யாம் திருப்பழனத்தைத் தரிசித்துக்கொண்டுவரும் மார்க்கத்தில் உமது திருத்தொண்டின் மகத்துவத்தைக் கேள்வியுற்று உம்மைக் காணவேண்டி வந்தோம்; நீர் அமைத்துள்ள தண்ணீர்ப்பந்தரில் உம்முடைய நாமத்தை வரையாது வேறொருவருடைய பெயரை எழுதவேண்டிய காரணம் யாதென வினவினர். இதனைக் கேட்ட அப்பூதியடிகள் உள்ளம் கொதித்துக் கடுஞ்சினமடைந்து "தொண்டரே! எம்போலும் அறிவிலிகள் உய்ந்து ஈடேறும் பொருட்டு 'நம்மை யுடையவர் கழற்கீழ் நயந்த திருத்தொண்டாலே, இம்மையிலும் பிழைக்கலாம்' எனத் திருவாய்மலர்ந்தருளிய திருநாவுக்கரசுநாயனருடைய திருநாமத்தை அடியேன் அங்குத் தீட்டியிருப்ப நீர் இவ்வித கன்ன கடூரமான வார்த்தைகளைக் கூறலாமா? 'மங்கலமாந்திருவேடத்துடன் நின்று இவ்வகை மொழிந்தீர்! எங்கு உறைவீர்? நீர் தாம் யார்? இயம்பும்" எனக்கடுகடுத்துரைத்தார். இவ்வார்த்தை யைக் கேட்ட தாண்டகவேந்தர் பிராமணோத்தமருடைய பத்தி நிலையை உணர்ந்து "அருமைத் தொண்டரே! சமணசமயப் படுகுழியில் வீழ்ந்து உய்ய வழியின்றித் தியங்கும்போது கொடிய சூலைநோயினுல் தடுத்து ஆட்கொள்ளப்பெற்று, சைவசமய நன்னெறிக்கொண்டு பிழைத்த அறிவில்லாச் சிறுமையேன் யானே" என உள்ளம் நெக்

குருகிக் கூறினர். அமுததாரைபோன்ற இவ்வார்த்தை களைக் கேட்ட அப்பூதியடிகள் அடியற்ற மரம்போலப் பூமியில்வீழ்ந்து எமது சமயாசாரியருடைய திருவடி களைச் சிரமேற் சூடினர். அவர் திருமுன்னிலையில் நின்று ஆனந்தக் கூத்தாடினர்; புகழ்ந்து போற்றிப்பாடினர்; தாம் பூர்வத்திலே செய்துகொண்ட பெரும் புண்ணிய மானது ஓர் உருவெடுத்துத், தம்மை ஆண்டருளும் பொ ருட்டு இங்கு எழுந்தருளிய தென்று ஆனந்தமடைந்தார்; யாது செய்வதென அறியாது சிறிதுவேளை தம்மைமறந்து நின்றார்; விரைந்து சென்று மனைவி மக்கள் சுற்றமித்திர ராதியோரை அழைத்துக்கொண்டு தமது சற்குருவைத் தரிசிக்கும்படி பணித்தார். வாகீசரைத் தமது மாளிகையி னுள்ளே அழைத்துச் சென்று உன்னதமான ஆசனத்தில் எழுந்தருளச் செய்தார்; அவரது திருவடிகளுக்கு அபி டேகம் செய்து அத்தீர்த்தத்தை உட்கொண்டார். பின் னர் தமது சற்குரு நாதருக்குத் திருவமுதூட்டுந் திருத் தொண்டில் ஈடுபடுவாராயினர்.

திருவமுது பாகம் செய்து முடிந்ததும் அப்பூதி நாய னருடைய மனைவியார் தமது சிரேஷ்ட புத்திரனாகிய மூத்த திருநாவுக்கரசை நோக்கி "மகனே! நீ வாழைத் தோட்டத்துட்சென்று வாழைக்குருத்து வெட்டி வரு குதி" யெனப் பணித்தார். அருந்தவ விளைவே வடிவாக அவதரித்து அடியார் தொண்டையே கடைப்பிடித்தொழு கும் அப்பாலகுமாரர் தோட்டத்துட் சென்று வாழைக் குருத்தை அரியும்போது கொடிய நஞ்சையுடைய ஓர் சர்ப் பம் தீண்டியது. பாம்பின் விடமானது முறைமுறையாக விரைந்து ஏறவும், அவ்வேகத்திலும் பன்மடங்கு வேகமாக அச்சிறுவன் ஓடிச்சென்று தாயார் பக்கலில் வாழைக்

குருத்தை வைத்துப் பூமியில் வீழ்ந்து இறந்தனன். மாடு மக்கள் பெண்டிர் சுற்றம் வீடு நாடு முதலானவைகளெல்லாம் தோன்றி நின்று அழியும் தன்மையனவென உணர்ந்து அவற்றை யெல்லாம் வெறுத்து, மெய்ப் பொருளிடத்து இடையறு நாட்டம் வைத்திருப்பவர்களும், அம்மெய்ப்பொருளைத் திருநாவுக்கரசு நாயனூர் என்னும் சற்குருவாயிலாக அடையவேண்டுமென்றும், அக் குருநாதருடைய திருவருள் என்று கிடைக்குமோவென்றும் அருந்தவஞ்செய்து கொண்டு இருப்பவர்களுமாகிய அப்பூதியடிகளும் அவரது பதிவிரதாசிரோன்மணியும் இறந்த தமது புதல்வனைப்பாயினுள் வைத்து மூடி வீட்டின் பின்புறத்தே இட்டு, திருநாவுக்கரசு நாயனூரைத் திருவமுது செய்விக்க முயன்றூர்கள். புதல்வன் இறந்தமையினுல் நாயனூர் திருவமுது செய்வதற்கு காலந்தாழ்க்கதேயென வருந்தினூர்கள்; அவனை வெறுத்தார்கள். பின்னர் நாயனூரிடம்விரைந்துசென்று திருவமுது செய்யும்பொருட்டு அவரை அழைத்தார்கள். நாயனூர் அங்கு வீற்றிருந்து திருவமுது செய்வதன்முன் அங்குள்ளார்க்கு விபூதி கொடுக்கும் போது அவருள்ளத்தில் ஓர் தடுமாற்றம் நிகழ்தலும் அப்பூதியடிகளை நோக்கி "விபூதிசாத்துவதற்கு உமது மூத்த புதல்வனை அழைக்குதிர்" என்றூர். அப்பூதியடிகள் பதைத்து நடுங்கிச் சற்று வேளை அயர்ந்து நின்ற பின் அறிவு தெளிந்து குருசந்நிதானத்தில் உண்மையையே கூறவேண்டுமாதலின் நடந்த சமாசாரத்தை ஆதியோடந்தமாகக் கூறினூர். நாவுக்கரசர் அப்பூதிநாயனூரின் அடியார் பூசைத்திறனை யறிந்து "உம்மைப்போலும் தொண்டர் உளரோ" எனக் கூறி இறந்த புதல்வனுடைய சவத்தைக் கொணர்வித்து "ஒன்றுகொலாமவர் சிந்தை உயர்

வரை" என்னும் திருப்பதிகம் பாடியருளினர். உடனே புத்திரன் உயிர்பெற்று எழுந்தான். திருநாவுக்கரசு நாயனாரும் அடியார் கூட்டமும் அங்குத் திருவமுது செய்தருளிச் சில நாட்டங்கியபின் திங்களூரிலிருந்து திருப்பழனத்துக்கு எழுந்தருளினார்கள். அங்கு அப்பூதி நாயனாருடைய திருத்தொண்டின் திறமையைப் புகழ்ந்து தேவாரத்திருப்பதிகம் பாடியருளினார். இ. சா.

---

## யானை போகும் வழி

(A topic on the Development of the Tamil Language).

உலகத்து உயிர்களில் சிறியது எறும்பும் பெரியது எறும்பியு மாதலால் பெரிதாய எறும்பி போகும் வழியைப் பற்றி அறிவதும் ஆவசியகமாகின்றது.

எறும்பி=யானை.

எறும்பு எறும்பி இவ்விரண்டிற்கும் முதற் சொல் ஒன்றே.

தண்டமென்பது யானை போகும் வழிக்குப் பெயராக வழங்குகின்றது. இதன் முதற் சொல் தண்டென்பது. தண்டு:—

| | | | |
|---|---|---|---|
| க | மூங்கில் | | |
| உ | துளையுடைப்பொருள் | | மூங்கில்போல்வது. |
| ௩ | தடி | ,, | மூங்கிற்றடி. |
| ச | வில் | ,, | மூங்கிலாலாவது. |
| ரு | சேனை | ,, | விற்றிறமுடையது. |
| சா | ஆண்குறி | ,, | உட்டுளையுடையது. |

எ பூவின்தாள் ,, உட்டுளையுடையது.
அ வீணை ,, மூங்கிற்றண்டுடையது.

முதலியன.

இதுவே பொருண் முறைமை.

தண்டு.

தண்டம் :—

க. யானைத்துதிக்கை = உட்டுளையுடையது.
உ. யானை செல்வழி = தூம்புடையது.

புழைக்கை; "புழைகயப் போர்வை போர்த்து (அ—தே) என்பவற்றால் துதிக்கையின் இலக்கணம் அறிந்து கொள்க, தூம்பு=உட்டுளை, நுழை வழி; நீர் விழுந் தூம்புமாம். அக்காலத்தில் எங்கும் காடுகளாக இருந்தபடி யாலும் மக்கள் அக்காட்டுள் நுழைந்து நுழைந்து போய்க் கொண்டிருந்தபடியாலும் அது நுழை வழியாயிற்று. நுழைதல்=உட்புகுதல், அதாவது உடும்பு முதலியன போல இயல்பாகச் செல்லும்வழி அறிந்து செல்வது, அந் நுழைவழிகள் பலவகைப்படும்.

அவையாவன :—

மக்கள் நுழைவழி, நரிநுழைவழி, பன்றிநுழைவழி, புலி நுழைவழி, சிங்கம் நுழைவழி, யானை நுழைவழி என் பனவாம்.

மக்கள் நுழைவழியே மாடு முதலியன நுழைவழியுமாம். அவ்வவற்றின் மயிர்விழுந்திருத்தல் மலம் விழுந்திருத்தல் நாற்றம் வீசுதல் முதலியனவும் அவ்வந்நுழை வழிகளுக்கு அடையாளங்களாகின்றன.

அவ்வவ்வடையாளங்களை அறிந்துகொண்டு அவ்வவற் றுக்குப் பகையுயிர்கள் அவ்வந் நுழைவழியிற் செல்லா.

இனி யானை செல்லும் வழியானது மிகவிசாலமுடையது; மேலே முறிந்த கிளைகளையுடைய மரங்களையுடையது; மதநீர் நாற்ற மிக்கது; மூத்திரச்சேறும் இலண்டக்குப்பலும் செறிந்துள்ளது; ஆங்காங்கே தந்தங்களின் தோற்றமுமுடையது. கவுல்=கவுன், மதநாற்றம்.

இவ்வடையாளங்களால் இது யானை செல்லும் வழியென்று மக்கள் அறிந்துகொண்டு அவ்வழியில் செல்லார். யானை ஒரிடத்திருந்து மற்றோரிடத்துக்குச் செல்லுங்கால் அநுபவத்தில் முதிர்ந்தவை முன்னும், மெலிந்தவையும் குட்டிகளும் வயதானவையும் நடுவிலும், இடைப்பட்டவை பின்னுமாகச் செல்லுவதியல்பு. ஆதலால் அவ்வழி மிகவிசாலமாக இருக்கும். இவ்வழியைப் புலவர் மனத்துக்கு உவமை கூறுவர், கம்பர் மனம் யானைசெல்லும் வழி போல்வது.

வல்லினம் மெல்லினம் இடையின மென்னும் எழுத்துகளின் கிடக்கை முறைமை யானைப் போக்கென்னும் அழகுடையதாகும். இக்காரணங்களால் யானைசெல்லும் வழிக்கு மாத்திரம் தண்டமென்னும் பெயருண்டாயது. இது தண்டம் அங்கே செல்லொணாதெனின் அக்காலத்தார் அதன் பொருளறிந்து கொண்டு அங்கே செல்லார்.

கிரிசாம் வனசாம் நதிசாம் என யானை மூவகைப்படலால் தண்டமென்பது வனசாமென்றும் யானை செல்லும் வழியை யுணர்த்துவதெனின் அக்காலத்தில் காடுகளில்லாத இடம் எங்கு மில்லாதபடியால் தண்டமென்பது அம்மூவகை யானைகளும் செல்லும் வழியெனவே பொருத்தமானது.

அக்காலத்து அரசர் முதலோர்க்கு யானை மிக உபயோகமாக இருந்தபடியால் யானை இருக்கும் இடங்களைச்

கண்டறிவதற்கு யானை செல்லும் வழிகளையும் கண்டறிவது ஆவசியகமாக இருந்தது; அதனால் யானை செல்லும் வழிக்கு மாத்திரம் தண்டமெனப் பிரசித்தமான பெயருண்டாயது. இனி மார்க்கமென்பதும் யானை செல்லும் வழியேயாம்.

இதன் முதற் சொல் மிர்கமென்பது.

மிர்கம் :—

க. யானை = துதிக்கையை மேலே தூக்கித் தழை மேய்வது.

உ. மான் = மேலே பறப்பதுபோல் விரைந்து ஓடுவது.

ங. கஸ்தூரிமான் = மானின மென்பது.

ச. பன்றி = யானையினின மென்பது.

ரு. நாற்காலுயிர்.

௬. விலங்கின் பொது.

எ. யானைவேட்டை.

அ. வேட்டை.

௯. வேட்டையானை

ய. தேடல் = வேட்டையானையை ஆராய்வது.

கக. யாசித்தல் = செல்வரைத் தேடிச் செல்வது.

கஉ. மிர்கசிலம் = மான்றலை.

கங. காட்சி = யானைக்காட்சி.

மிர்சம்—மிர்கணம் = தேடல், மிருகம் = விருகம்.

மிர்கம்நம் = கஸ்தூரி; மிர்காசனம் = சிங்கம், புலி.

மிர்கம்—மூர்க்கம் = மிர்கத்தின் தன்மை.

மிர்கம்.

மார்க்கம் :—

க. யானைசெல்வழி.

உ. வழி.

ங. சமயம்.

ச. மூலம்.

ரு. நெடுந் தெரு, யானை செல்வழிபோல்வது.

சு. தெரு.

எ. கஸ்தூரி=மிர்கமதம்.

அ. கரிசலங்கண்ணி=யானைபினிறமுடையது.

கூ. கையாந்தகரை=கரிசலங்கண்ணியினினம்.

ய. தேடல்.

கக. ஆராய்ச்சி.

கஉ. மார்கழி மாசம்.

கங. மறுதனிப்பு=யானை செல்வழியிலுண்டாவது.

கச. உலகம்=விசாலமானது.

மார்க்கவம்=கரிசலங்கண்ணி.

மார்ககிணீ=வழிச்செல்வோன், வேடன், யானை செல்வழி அறிந்தவனென்பது.

மார்கஞ் சிலம்=மார்சுளி—மார்சுழி.

மாரிகழிவது மார்கழியெனலும் பொருந்தும்.

மார்க்கணம்=அம்பு, தேடல், இசப்பு.

இது யானை செல்லும் வழியென்றறிந்து கொண்டு அவ்வழியில் அம்பொடு செல்லும் வழக்கமிருந்தமையின் மார்க்கணமென்பது அம்பினை யுணர்த்திற்று.

மார்க்கணம்—மார்ச்சனம்=முழவின்மண், யானை ஒலி போலி செய்வது.

மார்ச்சனை
மார்க்கணர் = இரப்போர்.

மார்க்கணம் = அம்பு

மார்க்கு = அடையாளம்

மார்க்கட்டு = அங்காடித் தொகுப்பு.

அம்பு ஒத்த வடிவு முன்புறத்திலிருந்தால் அடையாளமும், பின்புறத்திலிருந்தால் குற்றமுமாம். உ-ம் க. வாளி = அடையாளம். வாளி = விசனி, விசனி = அம்பு. உ. எசு = குற்றம், எ = அம்பு.

முன் புறத்தில் அம்பின் வடிவு பெற்ற வீரனது உருவத்தை அவ்வடிவோடு கல் முதலியவற்றால் செய்து, அவனது வீரச் செயலை எல்லோரும் அறியும்படி அதனைச் சிறந்தோர் அங்காடி நடுவில் நாபித்தபடியால் அவ்விடத்திற்கு மார்கட் எனப் பெயர் வந்ததெனக் கூறலாம்.

வடுத்துளைத்த கல்லபிராமம்.

மிர்கமென்பதற்கு முதற்பொருள் யானையையே கொள்ளவேண்டும். கொள்ளவே அதனியையாகும் மார்க்கமென்பதற்கும் முதற் பொருள் யானை செல்லும் வழியென்பது துணிபாகின்றது. இதுவே பொருள்கொள்ளும் முறைமையாம்.

மிர்க மென்பதன் பொருளை உய்த்துணரின் தாவர பட்சிணிகளாகிய விலங்குகளையே கொள்ளவேண்டு மெனத் தோன்றுகிறது.

மெகம்—மிர்கம் = யானை. (ஆ-தீ.)

முற்றிற்று.

மாகறல் கார்த்திகேய முதலியார்.

---

# தாய் செய்த நன்றிகள்.



(வண்ணை நகர் ஸ்ரீ க. வைத்தியலிங்க பிள்ளை எழுதியது.)

அம்புவி மீதில் ஆறறி வுள்ள
மனிதராய்ப் பிறந்து மனச்சாட்சி யின்றிப்
பெற்றதாய் தன்னைப் பணிப்பெண் போல
வைத்து நடத்தும் மாந்தரே கேண்மின்!
புத்திரர் விரும்பி அறமெலாம் புரிந்தும்!
குலதெய் வங்களைக் கும்பிட் டும்பல
தீர்த்த யாத்திரை சிவஸ்தல யாத்திரை
செய்வதற் காகத் திருவடி வருந்தத்
தேசங்கள் தோறுஞ் சென்றல மந்தும்!
அன்ன காரம் அனைத்தையு நீக்கி
அளவிலா விரத மனுட்டித் தயர்ந்தும்!
ஓதிடுங் கருப்ப முற்றபின் னெவ்வொரு
மாதங்க டோறும் மருந்துக ளருந்தியும்!
வாயு வருத்தம் உவாந்தி முதலிய
பிணிகளைச் சகித்தும்! பிள்ளையி னாசையால்
பத்துத் திங்களும் படாத பாடுகள்
அனைத்தையும் வெறுக்கா தனுபவித் திருந்து
எண்ணரும் பிரசவ வேதனை யெய்திப்
பின்ன மில்லாது குழந்தை பிறந்தபின்
கண்ணை இமைகள் காப்பது போல.
எந்த நேரமும் நித்திரை யின்றி

அழும்போ தெல்லாந் தனப்பா லளித்து
தாலாட் டிச்சீர் ஆட்டித் தயவொடு
மார்பினுந் தோளினும் வைதது வளர்த்தும்!
நோயுற்ற காலை மருந்து தான் றுகர்ந்தும்!
அ.நுதினம் மலமூத் திரா திக ளள்ளியும்!
இன்னும் அளப்பிலா இம்சைக ளடைந்தும்
மனங்கோ ணுது வளர்த்த அன்னையர்க்கு
மைந்தர்க ளாகிய நாங்கள்ஒவ் வொருவரும்
பண்ணிய உணவு ஆடைக ளிந்து
புகன்ற குற்றேவல் அனைத்தையும் புரிந்து
காக்கினுந் தாயர் கண்துஞ் சாமல்
ஒருநா ளிமைத்த உதவிக டமக்கும்
இன்னல்க டமக்கும் இணையா காதே!
அதனு லன்றோ ஔவைப் பிராட்டியார்
"அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்"
என்று மொழிந்தும் இணையிலாத் தாயிற்
சிறந்ததோர் கோயி லில்லையெனச் செப்பியும்
தாயோ டறுசுவை போமெனச் சாற்றியும்
"தந்தை தாய்பேண்" என்றுரை தந்தும்
ஈன்றவள் பெருமையை யெடுத்து விளக்கினர்
இன்னும் பெரியோர் எத்தனை பேர்கள்
தோத்திர ரூபமாய்ச் சொற்றபா வினங்களில்
அன்னையொப் பாயென் அன்னைநீ யென்றும்
தாயா யீன்றுன் தாயினு மினியான்
என்றடை கொடுத்து வத்தின ரன்றே!
சாற்றரும் வியாசர் சங்கரா சாரியர்
முதலிய மகான்கள் தாய்மொழிந் திட்ட

குற்றேவல்களைத் தலைமிசைக் கொண்டு
ஆர்வமோ டியற்றிய தறிந்திலீர் கொல்லோ?
அனைத்தையுந் துறந்த பட்டினத் தடிகள்
தாயா ரிறந்தபின் தகனக் கிரியைகள்
செய்தபோ தங்கவர் செப்பிய பாக்களைக்
கேடுறு நீவிர் கேட்டறி யீரோ?
இத்தகை ஞானியர் இணையடி வழுத்திய
அன்னையர் தங்களை அவமரி யாதையாய்
நடத்தினல் நமக்கு நற்கதி கிட்டுமோ?
இன்னுஞ் சிலர்பிதா மாதா இறந்த
திதிகளி லவர்க்குச் சிராத்தஞ் செய்திட
நினையா தயர்த்து நிரீச்சுர வாதிகள்
போலவே மனைவி புத்திர சோடு
காகபோ சனமா யுண்டு களிக்கிறார்!
இத்தகை யோர்க ளிறந்தபின் னிவர்க்குப்
புத்திரர் திவசம் புரிந்திடு வாரோ?
பாரினில் நன்றி மறந்த பாவத்தைச்
சேது தீர்த்தமுந் தீர்க்கமாட் டாதே!
ஆதலா லெனது அன்பரே கேண்மின்!
ஈன்றதா யைக்குல தெய்வமா யெண்ணிச்
சிறுவய சதனி லெமக்கவர் செய்த
நன்றியை நினைந்தவர் நோயால் நலிந்த
போதினிற் றக்க வைத்தியம் புரிந்து
பக்கத்திருந்து பார்த்தவர் மரிக்கின்
ஈமக் கிரியை யனைத்தையும் லோபம்
இல்லா தியற்றியத் தாயையெந் நாளும்
மனத்தால் வழுத்தி வைகி வாழ்குதிரே.

ு. சா.

---

# அரசியற் புலவர்—கோவூர் கிழார்

(48-ம் பக்கத் தொடர்ச்சி.)

## III

## இவரது கல்வி மேம்பாடு

நமது புலவர் கல்வி கேள்விகளிற் சிறந்தவர் என்று முன்னர்க் கூறப்பட்டது. அக்காலத்தில் கல்வி என்ன நிலையில் இருந்ததென ஆராய்வோமாயின் மிக்க மேம்பட்ட நிலையிலிருந்ததென்றே சொல்லவேண்டும். காலம் கடைச் சங்கத் திறுதிக் காலமாகையால் புலவர் பலர் வாழ்ந்திருந்தனர். அதற்கொப்ப பாவலருங் கல்வியில் வல்லவர்களாகவே யிருந்தனர். அப்படி யிருந்ததனாற்றான் முருகவேளது அருள்பெற்ற குமரகுருபரரும் தமது நன்னெறியிலே 'பொன்னணியும் வேந்தர் அது புனையாப், பெருங்கல்வி மன்னுமறிஞரை ஒவ்வா'ரென்று பாடி வைத்தார். எத்துணை வலிமையுடையனாயினும் அறிவும் ஊக்கமும் குறைவுபடாதவனே வேந்தனாவான். அவ்வாறே முன்னாள் வேந்தரிருந்தனர். அதனாலேயே பழுமரமென்னக் கொற்றவரைச் சூழ்ந்திருந்தனர் பாவலரும். நமது புலவர் கடைச் சங்க காலத்தவரென்று முன்னர்க் கூறப்பட்டது.

சங்கத்துச் சான்றோரெல்லாம் சுருங்கச் சொல்லிப் பெருக உரைகொள்ளப் பாடும் ஆற்றலும், சிறுமகாரும் பொருள் தெளிவுறப் பாடும் பெருமையுமுடையார். நமது புலவரும் அதனினின்றும் வேறுபாடுடையவரன்று. பொய்யில் புலவன் புகன்ற

நன்னூற்கு இவர் கூறிய திருவள்ளுவமாலைச் செய்யுள் இக் கூற்றை வலியுறுத்தும், அது பின் வருமாறு :—

அறமுதனான்கு மகலிடத்தோ ரெல்லாந்
திறமுறத் தேர்ந்து தெளியக்—குறள்வெண்பாப்
பன்னிய வள்ளுவனார் பான்முறைநே ரொவ்வாதே
முன்னை முதுவோர் மொழி.

இவ்வெள்ளைப் பாவிலே எவ்வளவு பொருளைச் செறிந்து வைத்திருக்கின்றனர் பாருங்கள். இவர் செய்ததாக நமக்கொரு பெருநூலும் எட்டாமற் போயினும் இந்நாளில் சமயோசிதப் பாடல்கள் என்று சொல்லும் பாக்களைப் போன்று அக்காலத்தில் சொல்லிய பாடல்கள் தொகை நூல்களான புற நானூற்றில் பதினைந்து பாடல்களும், குறுந்தொகையில் ஒன்றும், நற்றிணையில் ஒன்றும் ஆகப் பதினேழு அகவற்பாக்களும், ஒரு வெண்பாவுங் கிடைத்திருக்கின்றன. புறநானூற்றிற் கண்டபாடல்கள் இராவிட்டால் இவரது பெருமையும், இவர் செய்த பல சந்துப்பாடுகளும் சூழ்ச்சிகளும் அறிய இடமின்றாகும். இவை களையே இரண்டாம் பகுதியிற் கூறப்பட்டிருக்கின்றது.

இவரது புலமையை ஊன்றிப் பார்ப்போமாயின் ஆழ்ந்த கருத்துக்களை வெகு இலேசாகப் பாடுந்திறன் வாய்ந்தவரென்பது விளங்கும். புறம் 32-வது செய்யுளில் நலங்கிள்ளி கருத்திற்கொண்ட எண்ணத்தை முடிக்கும் வன்மை வாய்ந்தவன் என்பது தோன்றவும் வடபுலத்தரசரும் அஞ்சி நிற்கின்றனர் என்பது தோன்றவும், இந்நலங்கிள்ளிக்கு இச்சாகசச் செயல்கள் ஒரு சிறுஅர் விளையாட்டை யொப்பது எனவும் பொருள்பட ‘குணகடல் பின்னதாகக் குடகடல் வெண்டலைப் புணரி நின் மான்குளம்பு அலைப்ப வலமுறை வருதலும் உண்டென்று அலம் வந்து நெஞ்சம் நடுங்க அவலம் பாயத் துஞ்சாக்கண்ண வடபுலத்தரசு’ எனவும் ; வேட்கோசிறுஅர் தேர்க்கால் வைத்த

பருந்திரள் போல அவன் கொண்ட குடுமித்து இத்தண்பணை நாடே என்றும் பாடினார். தேர்க்கால் என்றது அவனது சக்கரத்தை; குடுமித்து என்றது அவன் கருத்தினுள்ளபடி. ஊரும் நாடும் செழிப்புற்றிருந்ததனால் எளிமை என்பது இன்னதென்றறியார் என்று சுட்டும் விதத்தைப் பாருங்கள். கானுறை வாழ்க்கைக் கதநாய் வேட்டுவன் மான்றசை சொரிந்த வட்டியும்; ஆய்மகள் தயிர்கொடு வந்த தசும்பும் நிறைய ஏரின் வாழ்நர் பேரிலரிவையர் குளக்கீழ் விளைந்த களக்கொள் வெண்ணெல் முகந்தனர் கொடுப்ப என்று பாடுகிறார். ஆயர் சேரியிலிருந்து தயிரைக் கொண்டுவந்து கொடுத்து விட்டு தயிர்பிடா நிறைய வெண்ணெல்லும், வேடன் மானிறைச்சி கொண்டு வந்த கடகம் (கடவாப்பெட்டி என்று இக்காலத்து வழங்கும்) நிறைய வெண்ணெல்லும் வாங்கிச் செல்வாரானால் நாட்டின் வளப்பம் அறிந்துகொள்ள என்ன தடை.

பழந்தமிழ்ப் புலவர் தமிழ் இலக்கண இலக்கியங்களை மாத்திரம் கற்றுப்பாடிப் பிழைத்தோரன்று; இவற்றோடு இயற்கைக் குறிகளை அறிந்தும் சோதிடம் சகுன நூல் முதலியனவும் நன்கு கற்றவர் என்பதற்கு இவரும் ஒரு எடுத்துக் காட்டாக நிற்கின்றார். இவர் கிள்ளிவளவன் என்னுஞ் சோழர் பெருந்தகையை நோக்கி நின்னைப் பகைத்தவர் நாட்டிலே இரு நான்கு திசைகளிலும் உற்கம் எரிந்து விழவும், பச்சையுடைய பெரிய மரத்திலே வற்றிப்போன கட்டைகள் பற்றி எரியவும், வெய்ய சுடரையுடைய ஞாயிறு பலவிடத்துஞ் செறிந்து தோன்றவும் காண என்றார். இவைகள் உற்பாதங்களாம். அஞ்சுவரத்தகுந புள்ளுக் குரலியம்ப என்கிறார். ஆந்தை அலறுவதைக் கேட்டால் ஏதோ துன்பம் உண்டென்று சொல்லக்கேட்கிறோம். இது சகுன சாத்திரத்தின் பாற்பட்டது. கனாநூல் என்று ஒன்று உண்டு. இக்

காலத்தில் அறவுணர்ச்சியின் வேறுபாடு என்றும் பிரமை என்றும் ஆங்கிலங் கற்றுச் சூனியவாதம் பேசுவோர் கூறுவர். அக்காலத்திலும் இக்காலத்திலும் இனியும் இக்கணம் பின் உண்டாவதை ஒப்புக்கொண்டு நடப்பர் ஆஸ்திகர். அதனாலன்றோ 'பழமொழி' நூலுடையாரும் கணமுந்துறு செயல் இல்லை என்றார். நம் புலவர் வளவனை நோக்கி அரசே! நின்னைப் பகைத்துக்கொண்டார் நாட்டிலுள்ள மக்கள் 'எயிறு நிலத்தில் விழவும், எண்ணை யாடவும் களிறுமேல் கொள்ளவும், காழகம் நீப்பவும், படை கட்டிலொடு கழிழவும் காண்பர்' என்பர்.

இனி இவர் நெடுங்கிள்ளிக்கு எவ்வாறு இடித்துரைத்து ல்லாற்றுப் படுத்தினர் என்று காட்டுவேன். இரும்பிடித் தொழுதியொடு பெருங்கயம்படியா; நெல்லுடைக் கவளமொடு நெய்மிதிபெறா; திருந்துரை நோன்வெளில் வருந்த ஒற்றி நிலமிசைப் புரளுங்கைய; வெய்துயிர்த்து அலமரும் யானை உருமேறென முழங்கவும், பாலின்றிக் குழவியலறவும், மகளிர்பூவில் வறுந்தலை முடிப்பவும் துன்புற இருத்தல் இன்னாது; காண்போர் நாணுத்தகவுடைத்து; நினக்கும் நாணுந்தகைமைவுடையது; அறவழியில் நிற்பவனாயின் இந்நாடு நினதெனச் சொல்லித் திறத்தல் செய்வாயாக; மறநெறியில் நிற்பவனாயின் போரொடு திறத்தல் செய்வாயாக என்று எவ்வளவு இடித்து, அழுந்தக் கூறக்கூடுமோ அவ்வளவு அழுத்தமாகக் கூறினர். இவ்வாறு இடித்துரைக்கும் புலவர் இந்நாளில் முயற்கோடாயினர். இவ்வாறு நல்லிசைப் புலமை வாய்ந்த புலவரும் அரியர் எனலாம்.

முற்காலத்தில் நந்தமிழ் நாடு இவ்வளவு மேம்பாடுடைய கல்வி கேள்விகளிற் சிறந்த சான்றோர்—ஒருவரிருவரோ—பலரையுடையதாக விருந்தது. நாட்டின் வளப்பமும் அதற்கேற்ற வித

யிருந்தது. பழமையான நூல்களில் அரசனுக்குத் தலைமகன் பிறந்தானென்று கேட்ட மாத்திரத்திலே, அவ்வரசன் பன்னீராண்டுக்குக் குடிக்கு வரும் இறையை நீக்கினான் என்றும் தன் னாட்டிலுள்ள சிறைக்கோட்டங்களை இடித்து விடும்படி கட்டளையிட்டானென்றும், தனது பொக்கிஷ சாலைகளைத் திறந்து விட்டு ஐந்து, ஏழு நாள் வரை வேண்டியோர் வேண்டியமட்டும் எடுத்துச் செல்ல அனுமதித்தானென்றும் படிக்கிறோம். சீவக சிந்தாமணியிலே சீவகன் பிறந்த நாளில் இவ்வாறு செய்தற்கில்லையே என்று அவன்றாய் இரங்கிக் கூறக்காண்கிறோம். மநுநீதி கண்டமுறைப் புராணமுடையார் இதனை வெகு அழகாக வர்ணித்திருக்கின்றார். இதுபோலவே இற்றைக்குச் சுமார் ஏழுநூறு ஆண்டுகட்கு முன்னரசாண்ட இரண்டாம் இராஜ ராஜனது மெய்க்கீர்த்திகளில் பல வளப்பங்கள் காணப்படுகின்றன. அக்காலத்தில் பெருமையுற்று வாழ்ந்தவர்களுக்குத் தமிழவேள் என்று ஒரு பட்டமளித்து வந்ததாக அறிகிறோம். அதற்கு மாறாக இக்காலத்தில் என்ன காண்கிறோம். தமிழ்மக்கள் வலிகுன்றி அறிவிழந்து கல்வியற்று, நன் மக்களின்றித் தவிக்கக் காண்கிறோம். இவ்வாறு சீர்குன்றிவரும் நம் நாட்டை முன்னேறச் செய்யவேண்டியது ஒவ்வொரு தமிழ்மகனது கடமையென்போம். அவ்வாறு செய்வோமாயின்

ஈன்ற பொழுதிற் பெரிதுவக்கும் தன்மகனைச்
சான்றோ னெனக்கேட்ட தாய்.

என்பதற்கிலக்கியமாவோம்.

இப்புலவர் பெருந்தகையைப் பழந்தமிழ்ப் பெருமக்களுள் யான் சேர்த்தது தகாதெனச் சிலர் மாறு பேசக்கூடும். பெருமக்கள் என்பார் அரசரும் வேளிருமன்றிப் பெருங்காரியங்களைச் செய்தாரையுங் கூறுவது பொருந்து மென்னும் பேரெண்ணங்

கொண்டும் பொது நோக்கானும் இவ்வாறு தொகுக்க நேர்ந்த தென்பேன். இராச்சியம் இரண்டு பட்டுச் சின்ன பின்னமாகி மாற்றான் நகைக்கவும், அமையம் வாய்த்துழி அந்நாட்டைக் கைப்பற்றவும் கூடியதை நீக்கி நாட்டில் அமைதி ஏற்படவும், அரசன் தீங்கிழைத்தற்கண் அவன் அவ்வாறு செய்யாது நிற்கவும் தூண்டியதோடு, ஒருவாறு நாட்டின் நிலையும் அவனது பெருமையும், தன் கல்வியின் மேம்பாடும் விளங்கவைத்தலான் இவரும் பெருமகனுதற் குரியாரென்க.

சுபம்!

கமலவசந்தத்தியா கேசனடிகளே சரணம்.

---

# திருஞான சம்பந்தர்.

(4-ம் தொகுதி 826-ம் பக்கத்துத் தொடர்ச்சி.)

முன், திருஞானசம்பந்தருக்கு எங்கும் நிறைந்துள்ள பெருமான் எந்தெந்த விஷயங்களில் தனது பிரியத்தைக் காட்டினுர் எனச் சொன்னேன். மற்றும் அவர் செய்த அற்புதங்களைச் சொல்லுகிறேன் கேளுங்கள். ஒரு தடவை தனது தகப்பனுர் யாகத்திற்கு பணம் வேண்டியிருந்தது. யாகத்திற்கோ ஏராளமாக பணம் செலவு செய்யவேண்டும். அவ்வளவு பணத்திற்கு இவர் எங்கே போவார். எல்லாம் வல்ல ஈஸ்வரனை மனதார நினைத்து அவர் சந்நிதியில் நின்று தமது தகப்பனுர் யாகத்துக்குப் போதுமான திரவியம் கொடுத்து அருளும்படி சம்பந்தர் பிரார்த்திக்க கடவுளும் தனது பக்தன்மேல் அன்பு கூர்ந்து, தனது பூத

கணங்களை அவர் விரும்பியபடியே ஏராளமான பொன் கொணர்ந்து கொடுக்கும்படி ஏவ, அவர்களும் அவ்வாறே சுவாமி சந்நிதானத்தில் ஞானசம்பந்தர் அறியாவண்ணம் பொற் கிண்ணங்களில் ஏராளமான பொற் காசுகளைக் கொணர்ந்து வைத்துவிட்டு மறைந்தனர். திருஞான சம்பந்தர் சற்று நேரம் கழித்து எறிட்டுப் பார்க்க சுவாமி பக்கத்தில் இருந்த பொற்காசுகளைக் கண்டு ஆச்சரியங்கொண்டு அவைகள் தனக்காக தெய்வ கடாக்ஷத்தால் வைக்கப்பட்டிருக்கிறது என்று நினைத்து அவைகளை அன்புடன் ஏற்றுக் கொண்டு ஈஸ்வரனை உள்ளத்தில் நினைத்து அவைகளைத் தன் தகப்பனாரிடம் கொடுத்தார். யாகமும் வெகு நேர்த்தியாய் நடந்தது. தகப்பனாரும் தமது அருமைப் பிள்ளையின் உயர்ந்த பக்தியை நினைத்து நினைத்து மகிழ்ந்தனர்.

இன்னொரு முறை இவர் அடியார்கள் பனியின்கடுமையால் வருந்த நேர்ந்தது. அப்பொழுதும் ஞானசம்பந்தர் தனது அடியார்கள் பனியின் பிணியால் வருந்தாமலிருக்கும்படி கடவுளைப் பிரார்த்திக்க கடவுளும் அப்படியே அனுக்கிரகம் செய்தார்.

மற்றும் ஒரு தடவை நாடெங்கும் பஞ்சம் உண்டாயிற்று. அதாவது நிலம் விளையாமல் ஜனங்கள் சாப்பாட்டிற்கே கஷ்டம் வந்து சேர்ந்தது. தானியத்தின் விலை அதிகமாயிற்று. இதை நினைத்து சம்பந்தர் கடவுளை மனப்பூர்ணமாக தியானிக்க, கடவுள் அவருக்கு ஒவ்வொரு நாளும் செலவுக்குப் போதுமான பணம் கொடுத்தருளினர். இப்பொழுது நான் இவரைப்பற்றி வேறு சில அபூர்வமான விஷயங்களைப்பற்றிச் சொல்லுகிறேன். அதாவது, இவர் கொண்டிருந்த தெய்வ பக்தியினால், கடவுள் இவரிடம் அன்பு

சேர்ந்து இவரது பிரார்த்தனைக்கு உட்பட்டு பிறர் உயிரையே காப்பாற்றிய அற்புதச் செயல்களே; அவைகளைக் கேட்டு அவர் கொண்டிருந்த தெய்வ பக்தியைப் பார்த்து ஆச்சரியப்படுவீர்கள். ஒரு தடவை இவரும் இவரது அடியார்களும் திருமருகல் என்ற சிவக்ஷேத்திரத்திற்கு சுவாமி தரிசனம் செய்யப்போய் சுவாமி சந்நிதானத்திலிருந்து தோத்திரம் செய்துகொண்டிருந்தார்கள். அக்கோயிலினருகில் ஒரு சத்திரம் உண்டு. அங்கே பிரயாணிகள் களைப்பு தீருவதற்கும் இராப்பொழுதைக் கழிப்பதற்கும் சமையல் செய்து சாப்பிடுகிறதற்கும் தங்குவார்கள். அந்த மாதிரி வந்து தங்கினவர்களில் வியாபாரி ஒருவன் தான் கல்யாணம் செய்துகொள்வதற்காக நிச்சயம் செய்துள்ள ஒரு பெண்ணையும் தன்னுடன் அழைத்து வந்திருந்தான். பொழுதுபோய்விட்டது. எல்லோரும் உறங்கிவிட்டார்கள். பக்கத்தில் எங்கேயோ ஒரு புற்றிலிருந்த ஓர் நாகம் சத்திரத்தில் நுழைந்து வியாபாரி அருகிற்சென்று அவனைத் தீண்டிற்று. விஷம் தலைக்கேறவே அவ்வணிகன் அப்படியே மூர்ச்சையானான். இதை யறிந்த அப்பெண்மணி கதறினாள். கதறி என்ன பயன்? செத்தவரைப் பிழைப்பு மூட்டுவார் இவ்வுலகில் உண்டோ? ஒன்றும தோன்றாமல் அக்கன்னிகை பிரமித்து மனம்பதறி கடைசியில் தெய்வமே என்று நினைத்து, அப்பிரிய புருஷனை வாரி எடுத்து சுவாமி சந்நிதானத்தில் கொணர்ந்துபோட்டு கூக்குரலிட்டு அழுது புலம்பினாள். அப்பொழுதுதான் திருஞான சம்பந்தர் கோயிலைவிட்டு வெளி வருகிற சமயம். வந்ததும் இந்த துக்ககரமான விஷயத்தைக்கண்டு பரிதாபம் மேலிட்டு அப்பெண்மணிக்கு துக்கம் போவதற்கு

வேண்டிய ஏற்பாட்டைச் செய்யவேண்டும் என நினைத்தார். அவளது பிரிய புருஷனை உயிர்ப்பித்துக் கொடுத்தாலல்லவோ அவளுக்கு சந்தோஷம் உண்டாகும். அப்படியே நின்று கடவுளை நினைத்து பாம்பினால் கடிபட்டு இறந்த அவ்வணிகன் பிழைத்து எழுந்திருக்கும்படி சிரமேல் கைகுவித்து கடவுளைத் தியானித்தார். அம்மாதிரியே சற்று நேரத்தில் வியாபாரிக்கு விஷம் இறங்கி, தூங்கியிருந்து பிறகு கண் விழிப்பவன் போல் அவன் மெதுவாகப் புரண்டான், எழுந்தான். அவ்விநோதத்தைக் கண்டாள் அப்பெண்மணி. உடனே சாஷ்டாங்கமாக சம்பந்தர் பாதத்தில் விழுந்து நமஸ்கரித்தாள். வியாபாரியும் அப்படியே செய்தான். பிறகு இருவரும் எழுந்து கடவுளைத் தியானம் செய்து நின்றார்கள். மறுநாள் திருஞான சம்பந்தரே அவர்களுக்கு ஈஸ்வர சந்நிதானத்தில் விவாஹம் நடப்பித்து முடித்து அவர்களுக்கு ஆசிகூறி அவர்களை அனுப்பிவிட்டார். இம்மாதிரி செய்ததற்கு வியாபாரியும் அவன் மனைவியும் மிகவும் ஆச்சரியப்பட்டு அவரது பக்தியை நினைத்து நினைத்து தாங்களும் அப்படியே பக்தி கொண்டிருக்கவேண்டும் என்று கடவுளை வணங்கி தங்கள் இருப்பிடம் போய்ச் சேர்ந்தார்கள்.

சம்பந்தரின் அருமையான செயல்கள் ஊரெங்கும் எட்டிற்று. பல நாட்டிலும் பரவிற்று. இவரைத் தரிசிக்க வருவார் சிலர். இவர் எப்பொழுது நமது ஊருக்கு வருவார் என்று ஏங்கி யிருப்பார் பலர். இவரைக் காண எப்பொழுது நமக்கு தருணம் வாய்க்கும் என எண்ணியிருப்பார் மற்றும் சிலர். இப்படி யிருக்கும் சமயத்தில் தெற்கேயுள்ள பாண்டிய நாட்டின் தலை நகரமாகிய மதுரை

யில் கூன் பாண்டியன் என்ற்ோர் அரசன் ஆண்டு வந்தான். அவன் சமணர் மதத்தைச் சார்ந்தவன். அவர் குடிகளுக்கு சமணர்கள் என்ற பெயர். சமணர் மதத்திற்கும் திருஞான சம்பந்தர் மதத்திற்கும் அதிக வித்தியாசம் உண்டு. ஆகையால் சமணர்கள் திருஞான சம்பந்தரிடம் துவேஷம் கொண்டார்கள். ஆனால் பாண்டியனது மனைவியும், அவரது முதன் மந்திரியும் திருஞான சம்பந்தர் சார்ந்த சைவ மதத்தையே சார்ந்தவர்கள். ஆகையால் இவர்கள இரண்டுபேருக்கு மாத்திரம் திருஞான சம்பந்தர் மீது அதிக பக்தி உண்டு. அவர்களும் திருஞான சம்பந்தரை நாம் எப்பொழுது காணலாம் என எண்ணி எண்ணி ஏங்கியிருந்தார்கள். சில தூதர்களை அழைத்து அவரிடம் போய் அவருக்கு உபசரித்து அவரை அதிக மரியாதையுடன் மதுரைக்கு அழைத்து வரும்படி அவர்களிடம் தெரிவித்தார்கள். அவர்களும் அதற்கு சம்மதித்து, அவரிருக்குமிடம் சென்று அவரை வணங்கி, அரசனுடையவும் மந்திரியினுடையவுமான பிரார்த்தனையை அறிவித்தார்கள். சம்பந்தரும் அவரது விருப்பத்திற்கு இசைந்து மதுரைக்கு தனது பக்தர்களுடனும், வந்திருந்த தூதர்களுடனும் பிரயாணமாயினர். மதுரைப் பட்டணம் நெருங்கின வுடனே அரசியும் மந்திரியும் இவரை எதிர் கொண்டழைத்து உபசரித்து இராப்பொழுதைக் கழிக்க ஒரு மடத்திலமரச் செய்தனர்.

இது கண்ட சமணர்கள் அதிக கோபங் கொண்டார்கள். இச் சிறு பாலனுக்கோ இவ்வளவு மரியாதை! இவனது மதந்தான் சிறந்ததோ ? இவனோடா நாம் பேசி யாருடைய மதம் சிறந்ததென்று தெரிந்து கொள்வது?

என்று ஒருவர்க்கொருவர் பேசிக்கொண்டார்கள். அன்று இரவே அவரது மடத்திற்கு நெருப்பிட்டு அவரையும் அவரது பக்தர்களையும் எரித்துவிட நினைத்தார்கள். எல்லோரும் அயர்ந்து நித்திரை செய்யும்படியான நடுநிசியில் சமணர்களைச் சேர்ந்த பாவிகள் சிலர் மடத்தில் தீயிட்டு விட்டார்கள். தூங்கிக் கொண்டிருந்த அடியார்கள்மீது அனல்காற்று பட்டவுடனே அவர்கள் எழுந்து சம்பந்தரை எழுப்பி விபரத்தைச் சொன்னார்கள். சம்பந்தர் இதன் ரகஸ்யத்தை அறிந்தார். சுவாமியை நினைத்து அனல் தன்னையும் தனது அடியார்களையும் பீடிக்காமலிருக்கும்படி பிரார்த்தித்து, அச்சூட்டின் குணம் பாண்டிய ராஜன்மீது தோன்றி அவன் அதனால் பாதிக்கப்பட வேண்டுமென்றும் தனது உள்ளத்தில் நினைத்தார். அதேசமயத்தில் அரண்மனையில் தூங்கிக் கொண்டிருந்த அரசனுக்கு உடம்பு முழுவதும் கொதிப்பு மேலிட்டு, சூடு தாங்கமுடியாதவனாய், பெரிச்சலுடன் படுக்கையில் புரள ஆரம்பித்தான். இது கண்ட அரசி, மந்திரி முதலானோர்கள் எவ்வளவு சிகிச்சைகள் செய்தும் ஒன்றும் பயன்படவில்லை. சமணர்களில் கெட்டிக்காரரான சில வைத்தியர்களை வரவழைத்தார்கள். நோயின் கொடுமை அதிகரித்துக் கொண்டே வந்தது.

(இன்னும் வரும்)

S. ஜெகன்னாதன்,
கிண்டர்கார்டன் உதவிபோதகர்,
டீசர்ஸ் காலேஜ், சைதாப்பேட்டை.

---

இவர்களையெல்லாம் திருப்திசெய்து கொண்டாலும், செட்டியோ மிகுதனவந்தன். ஜாதிக் கட்டுப்பாட்டை விட்டு மனமாறக் கல்யாணம் செய்துகொடுப்பது கஷ்டம். இவையெல்லாம் நிறைவேறிவிட்ட போதிலும், நீ அவளை மணந்தபின் அவள் இராஜஸ்திரீயாகி விடுகின்றாள். அதிலும், அவளே பட்டமகிஷி. பின் அவளைக் கற்பற்றவளென்று ரூபிப்பதெங்ஙனம்? யாருக்கு அவமானம்?"

சுப்பிரமணியன்:—"சபதம் நிறைவேறத்தான் இன்னமும் ஏழு வருஷங்களிருக்கின்றனவே. அது முடிவதைப்பற்றி இப்பொழுது என்ன அவசரம். எப்படியாயினும் நான் அவளை அடையவேண்டும். முடியாத காரியமாயின் என்னை நீ வெகு சீக்கிரத்தில் இழந்துவிடுவாய். அவளை அடையாமலாவது, அவளை அடையலாமென்ற தைரியம் இல்லாமலாவது, என் உயிர் அதிககாலம் இந்த உடலில் தங்காது."

அனந்தராமன்:—"நீ சொல்வது மிகவும் வேடிக்கையே. 'மீசைக்கும் ஆசை கூழுக்கும் ஆசை' என்றாலும், சம்மாலியன்றளவு நாம் பிரயாசை யெடுத்துக் கொள்ளவேண்டும். நீ அதற்குள் அவசரப்பட்டு உயிரைவிட யத்தனிப்பாயாகில், நான் அதற்குமுன் உயிரைவிடுவேன். இதை நீ விளையாட்டாக எண்ணாதே."

சுப்பிரமணியன்:—"அனந்து! நின்பொருட்டு நான் உயிர் வைத்திருந்தாலும், அதிக நாள், அவள் கிடைக்க மாட்டாளென்று தெரிந்தும் பொறுத்தி

ருக்க நேரின், நான் பிரயாசைப்படாமலே நீங்கும் போலிருக்கிறது."

அனந்தராமன்:—"அம்தன்னமோ அப்பா! உனக்கு மோசம் வருவதாயின் நான் உனக்குப் பின் றுவேனென்று நினைக்கவேண்டாம். முந்திக்கொள் வேன்."

சுப்பிரமணியன்:—"ஆமாம். உனக்கு ஏதாகிலும் வீண் சந்தேகம் நேரிட்டு எனக்குமுன் போகவேண்டு மென்று உயிரை விடு; பின் நான் கட்டாயம் உன்பின் னோடு வந்து விடுகிறேன்.'!

அனந்தராமன்:—"அப்படியெல்லாம் ஒன்றுஞ் செய்யமாட்டேன். 'ஆசை அறுபது நாள், மோகம் முப்பது நாள்' என்னாக ஆகுந் திடீரென்று தோன்றிய காதல் திடீரென மறைந்தே போகும்."

சுப்பிரமணியன்:—"என்ன அனந்தராமா! என் விஷயத்தில் அப்படி வேடிக்கையாக நினைக்காதே."

அனந்தராமன்:—"வேடிக்கையில்லை; பொதுவாக உன்னைச் சோதிக்கவே கேட்டேன். நீ அதற்காகப் பயப்படாதே. உனக்கோ நோத்திற்கு நேரம் முகம் அதிக வாட்டமுறுகின்றது. நடக்கவேண்டிய தைப்பற்றி இனிப்பேசுவோம். தைரியத்தைக் கை விடாதே முயற்சி செய்தால் எதுதான் நடக்காது? அரசர்க்குரிய நால்வித உபாயங்களாகிய 'சாம-பேத-தான-தண்டம் என்பவற்றின் உதவியினால் எப்படியா யினும் காரியத்தை முடித்துக் கொள்ளலாம். உன் ராஜ்யத்திற்குள்ளிருந்து கொண்டு, நீ கேட்கும்

பொழுது பெண்கொடுக்க மாட்டேனென்று எந்த ஜாதிக்காரன் சொல்லப்போகிறான்?"

சுப்பிரமணியன்:—"என் நண்ப! நான் நிச்சயமாய் அவளை அடைவேனோ? என் நெஞ்சானது, வெந்தழல் மெழுகுபோலுருகுகின்றது."

அனந்தராமன்:—"பயப்படாதே. உனக்கு ஒரு மனவருத்தம் வந்தபொழுது நான் அதை நிவர்த்திக்க வழி செய்யாவிடில் நான் தோழனென்று இருந்தென்ன பிரயோஜனம்?

'உடுக்கை யிழந்தவன்கைபோல ஆங்கே
இடுக்கண்களை வதாநட்பு'

என்றபடி நீ சொல்லாமல் நான் செய்யவேண்டியதே கடமை. பெரிய மஹாராஜா அவர்களும் உனக்கேற்றாற்போல் அடுத்தவாரம் வருவதாய் தூது வந்திருக்கிறது. ஆனால், நீ எனக்கொரு வரந்தரவேண்டும். அதைத் தந்தாயானால் உனக்கு உதவி செய்ய எனக்கு உற்சாகமாயிருக்கும்."

சுப்பிரமணியன்:—"என்ன வேண்டும்? கேள்."

அனந்தராமன்:—"காரிய முடியுமட்டும் நீ இவ்வளவு வருத்தமுள்ளவனாக விருக்கக் கூடாது. நீ இப்படி இருப்பதைப்பார்க்க என்னால் சகிக்கமுடியவில்லை.

சுப்பிரமணியன்:—"என்னாற் கூடியமட்டும் உனக்காக என்மனதுடன் யுத்தம் செய்கிறேன்."

இங்ஙனம் பேசிக் கொண்டிருக்கும்பொழுது ஒரு மனிதன் வந்து, "மஹாராஜா! தங்களை மஹாராணி அவர்கள் அழைத்துக் கொண்டுவரச் சொன்

னார்கள். காலை ஆகாரம் இதுவரை சாப்பிடவில்லையா மே! இதோ என் சட்டைக்குமேல் புடைத்துக் கொண்டிருக்கும். என் பெருத்த தொந்தியைப் பாருங் கள் தாங்கள் இப்பொழுது தங்கள் மனதுடன் யுத் தம் செய்கிறேனென்று சொன்னதுபோல், நான் நேற்று இரவுமுழுவதும், என்வயிற்றுடன் யுத்தம் செய்தேன். காரணம்—என்னைக் கேட்காமலே என் வயிற்றிற்குள் வலித்தது. நான், அது சொன்னதைக் கேட்காமல் சாப்பிட முடியாதென்று விட்டேன். அப்படியிருந்தும், வயிறு கொஞ்சமேனும் உருவத் திற் குறைந்ததாகத் தெரியவில்லை. பசி உயிரை வாட்டு கிறது. இதிலிருந்து நான் தெரிந்து கொண்டதென்ன வென்றால் உருவத்தைக்கண்டு ஒருவரையும் அவமதிக் கக்கூடாது," என்று சொன்னான். நமது நண்பரிரு வரும் அதைக் கேட்டுச் சிரித்துக் கொண்டிருந்தார் கள். பின், வந்த மனிதனை அனந்த ராமன் நோக்கி, "விகடமோ! நீர் சொன்னது முன் பின் சம்பந்த மில்லாமலிருக்கிறதே!" என்றான்.

விகடன் :—"ஓகோ! இதுவேறேயா? இருக்கட் டும் உமக்கும், உமதுகாதிலிருக்கும் கொடுக்கனுக்கும்-ம்-இல்லை, கடுக்கனுக்கும் என்ன சம்பந்தம். நேற்று மத்யானம் விளக்கெண்ணெய் விட்டுச் சாப்பிட்டதி னால், நாக்கு வழுகி, ஒன்றைச் சொல்ல நினைத்தால் அது இன்னொன்றாக மாறிவிடுகிறது?"

அனந்தராமன் :—"காதிற்கும் கடுக்கனுக்கும் அழகுதான் சம்பந்தம்."

விகடன் :—"ஓ!! நீர் அழகுள்ளவரென்று உமக்கே பெருமை வந்துவிட்டது போலிருக்கிறதே! இதுதானே உதவாது,"

அனந்தராமன் :—" காதிற்கும் கடுக்கனுக்கும் அழகு சம்பந்தமென்று சொன்னேனே யன்றி நான் அழகுள்ளவனென்று சொல்லவில்லையே. அழகை அதிகரிக்கச் செய்யும் உத்தேசத்துடன் போடப்பட்டிருக்கிறதென்ற அர்த்தத்துடன் தான் சொன்னேன்."

விகடன் :—உமது காதிற்கும் கடுக்கனுக்கும் அழகு சம்பந்தமென்றால், தொந்திவயிற்றிற்கும் எனக்கும் பசிதான் சம்பந்தம்?"

அனந்தராமன் :—"ஐயா விகடப்புலியே! அதெப்படி யேனுமிருக்கட்டும், நமது சின்ன மஹாராஜா கொஞ்சம் மனவியாகுல மடைந்திருக்கிறார்கள். நல்ல வேடிக்கைப் பேச்சுகளினால் அவர்கள் மனதைச் சந்தோஷப்படுத்தும்!"

விகடன் :—" ஆ—! என்னது? விகடப்புலியா? விட்டுப்புலியா? உமக்காக நம்மஹாராஜா அவர்கள் மனதுடன் யுத்தம் செய்யப்போகிறதாக நான் வரும்போது சொல்லிக்கொண்டிருந்தார்கள். நீரே அதற்கு காரணபிசாசாயிருக்கிறீர்—இல்லை இல்லை காரணபூதம். வருத்தப் பட்டுக் கொள்ளாதேயும். பூதம், பிசாசு இரண்டிற்கும் அர்த்தம் ஒன்றுதான்--அப்படியிருக்க அந்தமனச் சண்டையை நான் இழுத்து என்மேல் போட்டுக் கொள்ளவேண்டு மென்பது உமதென்

ண்மோ? அப்படிச் செய்து சின்ன மஹாராஜா அவர்களுக்கு கோபம் வந்துவிட்டால், நல்ல தடியாய் என் முதுகின்மேற்படியும்: அதிலிருந்து செக்கச்செவேலென்று ரத்தம் வடியும். பின், அடிப்பட்ட இடம் விநாயகசதுர்த்தி கொழுக்கட்டையாக முடியும். நீர் அந்துக்குப்போய் சாப்பிட்டு வாரும். மஹாராஜாவுக்குப் பசி அதிகம். முகமுங்கூட வாடிவிட்டது. அவர்கள் சாப்பிடப் போகட்டும். (மெதுவாய்) முக்கியமாய் எனக்கும் பசி அதிகம். போகவேண்டும்,''

என்றான். அனந்தராமன் விடைபெற்றுக்கொண்டு தன்னில்லமேக, சுப்பிரமணியனும் விகடப்புலி—யின்வேள்வா இருவரும் அரண்மனை சென்றார்.

---

## மூன்றாம் அத்தியாயம்.

---

### கலியாணப் பேச்சு—விருதாவாய்ப் போச்சு.

மூன் அத்தியாயத்திலுள்ளவை நடந்த மறு நாள், அதாவது, பன்னிரண்டாம் திருநாளன்று காலையில், ஒருவர் தனபாலசெட்டியாரின் வீட்டுவாயிற் காப்போனிடம் வந்து நின்று, ''ஐயா! செட்டியாரவர்கள் இருக்கிறார்களா?'' என்று கேட்டார்.

காவலன்:—''ஐயா! எஜமானனுக்குப் பூஜை நேரம். இனி சாப்பாடானதற்குமுன் அவர்களைக் காண முடியாது.''

என்று சொல்லிக்கொண்டிருக்கும்போது, ஒரு பெண் அவர்களைக் கடந்து, வீட்டிற்குட் சென்று ஒரு

தனி அறைக்குள் எட்டிப் பார்த்தாள். அந்த அறையானது, தரையில் இரத்தினக்கம்பளம் விரிக்கப்பட்டு, மத்தியில் மிக்க வேலைப்பாடமைந்த ஒரு சலவைக்கல் மேசையும், அதைச் சுற்றி நான்கு அழகான நாற்காலிகளும் போடப்பட்டதாயிருந்தது. அறையின் ஒரு ஓரத்தில் ஒரு சாய்வுக்கட்டிலில் † நம் வள்ளிநாயகி மிகவும் ஆழ்ந்த கருத்துடன் வாசித்துக்கொண்டிருந்தாள். மற்றொரு ஓரத்தில் நேர்த்தியான கருப்பு மரத்தினுற் செய்யப்பட்ட நான்கு அலமாரிகளில் புஸ்தகங்களும், மற்றொன்றில் பெண்களின் தையல்வேலைக்கு வேண்டிய சாமான்களுமிருந்தன. சுவரில், பல தேசத்து அழகிய மாதர்களின் படங்களும், அவற்றின் மத்தியில் நக்ஷத்திரக் கூட்டத்திற்குள் விளங்கும் சந்திரனைப்போல் கட்டழகுவாய்ந்த வள்ளி நாயகியின் படமும் மாட்டப்பட்டிருந்தன. சாளரங்களின் வழியாய் வெளியே பார்த்தால், ஒரு பெரிய தோட்டமும், சாளரவாயிற்களின் முன்பாக தட்டி கட்டி அவைகளில் அநேக புஷ்பக்கொடிகளைப் படரவிட்டிருப்பதும் தெரியவரும்.

வந்தபெண், வள்ளிநாயகி வேறுமுகமாய் வெகு கவனத்துடன் வாசித்துக்கொண்டிருப்பதைக் கண்டு, வள்ளிநாயகி பார்க்காதபடி மெதுவாக அவள் சமீபத்திற் சென்று வள்ளிநாயகியின் கண்களைத் தன்னிரு கரங்களாலும் மூடினுள். வள்ளிநாயகி முதலாவது, "சீதா லக்ஷ்மி" என்றுள். பின் தன் நேத்திரங்களை மூடியிருக்கும் கைகளைத் தடவிப் பார்த்துவிட்டு, "மஹா மாக்ஷிமைபொருந்திய, இராஜ இராஜேஸ்வரி

கனம் இராஜாம்பாளவர்கள்" என்றாள். உடனே அந்தப் பெண், முடிவைகளை எடுத்துவிட்டு, "என்னடீ! முதலில் பிரதாலக்ஷ்மி யென்றாய். பின் என் கரங்களைத் தடவிப் பார்த்துவிட்டு, இராஜாம்பாளென்று சொல்லி விட்டாய்!" என்று ஆச்சரியப்பட்டாள்.

வள்ளிநாயகி:—"பார்த்தயாடீ என் ஜோஸ்யத்தை? சும்மா வா?"

இராஜாம்பாள்:—"உன் ஜோஸ்ய மிருக்கட்டும்டீ! எப்படித் தெரிந்தது சொல்லேன்?"

வள்ளிநாயகி:—"அதுதான் சொன்னேனே ஜோஸ்யம் பார்த்தேனென்று. முதலில் ஜோஸ்யம் பார்க்காமலே பிரதாலக்ஷ்மியா யிருக்குமென்று சொன்னேன். பின் ஜோஸ்யம் பார்த்ததில் நீயென்று தெரிந்தது."

இராஜாம்பாள்:—"நீ ஜோஸ்யத்தில் கெட்டிக்காரிதான். உனக்கு மாப்பிள்ளை எந்த வூரிலிருந்து வருவான் சொல்லு பார்ப்போம்?"

வள்ளிநாயகி:— (முகம் நாணமுற) "போடீ! அதெல்லாம் வேண்டாம். உனக்குச் சொல்லுகிறேன். உன் கழுத்திலொருவன் தாலிகட்டுவான். அவன் தான் உனக்கு மாப்பிள்ளை. அவனெங்கிருந்து வருவானென்றால், தெருவழியாய் வீட்டுக்குள் வருவான். இதற்குமேல் ஜோஸ்யம் சொல்ல முடியாது. சொல்ல வேண்டுமானால் தக்ஷிணை கொடுக்கவேண்டும்; நிறை நாழி, புஷ்பம், சந்தனம், வெற்றிலை, பாக்கு, முதலிய வைகளெல்லாம் கொண்டுவரவேண்டும்."

இராஜாம்பாள்:—(தானும் வெட்கி) "உன் மாப்

பிள்ளையைப்பற்றிச் சொல்லுவாயானல் நீ கேட்டவை யெல்லாம் கொண்டுவருகிறேன். உம்! அதெல்லா மிருக்கட்டுமடி, உனக்கு நானென்று எப்படித் தெரிந்தது சொல்லேன்.

வள்ளிநாயகி:—“அப்படி ஒழுங்காகக் கேள். முதலில் என் கண்ணை மூடத்தக்க தோழி, தாங்களொன்று; சீதாலக்ஷ்மியொன்று; பங்கஜமொன்று; மங்களமொன்று. பங்கஜம் சிறு பெண். அவள் மூடின உடனே அவளுடைய சிறு கைகளின் ஸ்பரிசம் நன்ருய்த் தெரிந்துவிடும். மேலும் மோதிரமும் போட்டிருப்பாள். மங்களாம்பாள் மூடினளானல், நான் யாரென்று சொல்லப் பிரயாசைப் படுமுன், அவளே சிரித்துவிடுவாள். சீதாலக்ஷ்மி கைக்கு இரண்டு காப்புகள் போட்டிருந்தாலும், ஆறுபட்டமுள்ள காப்பு நீதான் போட்டிருப்பாய். சரிதானே?”

இராஜாம்பாள்:—“சரி. இனி நான்வந்த முக்கிய காரியத்தைப் பேசிக்கொண்டு மற்றவைகளை பின்னல் பேசுவோம்.”

வள்ளிநாயகி:—“நமக்குள் என்ன முக்கியகாரியம்? உன்னுடைய பொம்மைக்கும் என்னுடைய பொம்மைக்கும் கலியாணம் பேசுவதற்கா?”

இராஜாம்பாள்:—“முன்னல் கண்ணை மூடியது யாரென்று சொன்னபடி எதற்காக வந்தேனென்றும் சொல்லிவிட யோசிக்கிருயோ? அது உன்னல் முடியாது.”

வள்ளிநாயகி:—“பின் நீதான் சொல்லேன்.”

இராஜாம்பாள்:—"நமது இளவரசர் உன்னைப் பற்றி ஒரு சபதம் செய்திருக்கிறார்."

வள்ளிநாயகி.—"இளவரசரா! என்னைப் பற்றியா! என்? இதோ பார்! கேலிப்பேச்சு பேசாதே."

இராஜாம்பாள்:— "வீண் பேச்சுக்களெல்லாம் அன்றோடே ஒழிந்தன. நாங்கள் இரண்டுமாதங்களுக்கு முன் உன்னையும் இளவரசனையும் பற்றிப் பேசினோமே. அதை, விநாலக்ஷ்மி எழெட்டு நாட்களுக்கு முன் வேடிக்கையாகத் தன் அண்ணனிடம் சொல்லிவிட்டாள் போலிருக்கிறது. அவன் அதை ஒவ்வொன்றும் விபரமாக இளவரசரிடம் சொல்லிவிட்டான். அதன்மேல் அவர், 'தன் ஜாதியே உயர்வென்றும், தாங்களே கற்புடையவர்களென்றும் கூறிய அந்தப் பெண்ணை, அவள் கற்பற்றவளென்று பலரறிய இன்னும் எழுவருஷங்களுக்குள் சிறையிலடைக்கா விட்டால் நான் இராஜகுமாரனல்ல' என்று கூறிவிட்டார்."

வள்ளிநாயகி :—"என்னடி! உண்மையாகவா? உனக்கு நிச்சயமாகத் தெரியுமா?"

இராஜாம்பாள் :—"உண்மையாகத்தான்; இளவரசர் தன் வாயினாற் சொல்ல நானே என் காதால் கேட்டேன்."

வள்ளிநாயகி :—"நீ அதற்கு என்ன தாவது சொன்னாயா?"

இராஜாம்பாள் :—"இளவயதுக் காரரிடம் நானென்னடி சொல்லுவேன்! மேலும் அவரோ ராஜா வீட்டுப் பிள்ளை. அத்துடன், இந்தச் சங்கதி

எனக்கு எப்படித் தெரிந்ததென்று உனக்குச் சொன்னால் நீ இந்தக் கேள்வி கேட்டிருக்க மாட்டாய்."

வள்ளிநாயகி:—"எப்படித் தெரிந்தது சொல்லு."

இராஜாம்பாள்.—"ஐந்தாம் திருநாளன்று அடுத்த அகத்துப் பையனொருவன் தாமரைப்பூ வைத்திருக்கக் கண்ட என் தம்பி தனக்கும் வேண்டுமென்று அழுதான். எவ்வளவோ சமாதானம் சொல்லி வேறு சாமான்கள் கொடுத்தும் அவன் அழுவதை நிறுத்தவில்லை. நமது ஊரில் அரண்மனைத் தோட்டத்தைத் தவிர வேறு இடங்களில் தான் தாமரைப்பூ இடையாதே; அகத்தில் வேறொருவரும் அச் சமயம் இல்லாததினால் எங்கள் அம்மா என்னைப் போய்க் கொண்டுவரச் சொன்னாள். நானும் அடுத்த அகத்துக் குட்டிகளிரண்டு பேரும் இரண்டு சிறு பையன்களுமாகப் போனோம். அரண்மனை விகடனெனக்குச் சித்தப்பா ஆனதால் தான் நான் போனேன். நாங்கள் போனபொழுது தோட்டம் திறந்துதானிருந்தது. விகடரங்கேயில்லை. உள்ளே யிருப்பாரென்று தோட்டத்திற்குள் போனோம். அங்கு வசந்த மண்டபத்தில் இளவரசரும் சீதாலக்ஷ்மியின் தமையன் அனந்தராமனும் பேசிக்கொண்டிருப்பதைக் கண்டு சுவர் மறைவில் போகும் பொழுது அனந்தராமன் அவரைப்பார்த்து, "சுப்பிரமணியராகிய உனக்கும் தனபால செட்டியாரின் மகளாகிய வள்ளிநாயகிக்கும் கலியாணமாம். நம் கலாசாலைப் பெண்களெல்லாம் பேசி முடிவு செய்திருக்கிறார்களாம்,' என்று சொன்னான். நான், உன் பெயரையும் பள்ளிக்கூடத்துப் பெண்களென்றும்

கேட்டவுடன், சுவரின் மறைவில் நின்றபடியே கேட்டுக் கொண்டிருந்தேன். இளவரசர், 'அதெ ன்ன?' வென்று கேட்க, அனந்தராமன், கலாசாலை நமக்குள் நடந்ததை யெல்லாம் சொல்லி, இது நடந்து ஒன்றரை மாதமாகி விட்டதென்றும், தனக்கு இரண்டு மூன்று நாட்களுக்கு முன் தன் தங்கை வேடிக்கையாகச் சொல்லத் தான் தெரியுமென்றும் சொன்னான். அதன்மேல் இளவரசர் நான் சொன்ன சபதத்தைச் சொன்னார். இதுதான் எனக்குத்தெரி யும். இந்தப் பேச்சு நடந்த உடனே உனக்குச் சொல்ல வேண்டுமென்று நினைத்தேன்; சௌகரியப் படவில்லை."

வள்ளிநாயகி :—"இளவரசர் சொல்லியதிலிரு ந்து, அவர் என்மேல் கோபங் கொண்டிருப்பதாகத் தான் தெரிகிறதோ?"

இராஜாம்பாள் :—"கோபமோ இல்லையோ; அதென்னால் சொல்ல முடியாது. ஆனால் அவர் க்ஷத் திரியர். கட்டாயம் சொல்லியபடி செய்தே தீர்ப்பா ரென்று நினைக்கிறேன். க்ஷத்திரியர்கள், செய்த சப தத்தை நிறைவேற்றாமல் விடமாட்டார்களென்று நான் அநேகம் கதைகளில் வாசித்திருக்கிறேன்."

வள்ளி நாயகி :—"அநேகமாய் அவர் அப்படிச் செய்யமாட்டாரென்றே நினைக்கிறேன்."

இராஜாம்பாள் :—"எதப்படி?"

வள்ளி நாயகி :—(பத்தாம் திருநாள் சாயுங்காலத் தில் நடந்த யாவற்றையுங் கூறி) "என்மேல் கோபங் கொண்டிருந்தால் என் உயிரைக் காப்பாற்றி, தன்

சொந்த வண்டியிலேற்றி அனுப்புவாரா? என்னைப் பற்றி எல்லாந் தெரிந்திருக்கும், என் பெயரைச் சொல்லும்படி எத்தனை தடவை கெஞ்சினர். என் கால்கள் வலிக்குமென்று வண்டியில் ஏற எத்தனை தடவை சொன்னர். தனக்குப் பட்ட காயத்தை கொஞ்சமேனும் கருதவில்லையே. கோபமுள்ளவரா யிருந்தால் இதெல்லாஞ் செய்திருக்க மாட்டா ரென்றே நினைக்கிறேன். ஆனல், நானுமவ்வளவு சொல்லி யிருக்கக் கூடாதுதான். அவர் என்னை என்ன செய்தார். மற்றவர்கள் செய்ததற்கு அவரையும் அவர் ஜாதியையும் மதிப்பில்லாமல் பேசி விட்டேன். இனி என்ன செய்வது? வருவது வந்துதான் தீரும்.

'யாகாவா ராயினு நாகாக்க காவாக்காற்
சோகாப்பர் சொல்லிழுக்குப் பட்டு'

தாயே சோமசுந்தரீ! மலையாசன் மகளே! நீதான் என்னைக் காப்பாற்ற வேண்டும். அவருடைய கருணை யான பார்வைக்கும் அந்தஸ்திற்கும் அவரப்படிச் செய்வாரென்று தோன்றவில்லை. ஒரு பெண்ணைக் கற் பற்றவளாகச் செய்வதில் அவருக்கு என்னலாபமிருக் கிறது? நான், அற்பம்-ஒரு பெண்தானே "

இராஜாம்பாள்:—" நீ பெண்தான். ஆணென்று யார் சொல்லுகிருர்கள்? அவருக்கு லாபமா? உன்னை க்ஷத்திரியரைக் கலியாணம் செய்யச் சொன்னதிலிரு ந்துதானே நீ க்ஷத்திரியர்களை அவ்வளவு பேசினுய். சீதாலக்ஷ்மியையும் பல சொன்னுய். சீதா லக்ஷ்மியும் தன்னைக் கேவலமாகப் பேசியதிலிருந்து தானே அழு

தாள். அது போலத்தானே அவரைக் கேவலமாகப் பேசினல் அவருக்கும் வருத்தமிருக்கும். மேலும் அவர் நம்மை ஆளத்தக்கவர். நீ அவருக்கு, உன்னை மன்னிக்கும்படி கேட்டெழுதினலென்ன? உன் விஷயத்தில் அவர் இரக்க முள்ளவராகத் தானே இருக்கிருர் போலிருக்கிறது.''

வள்ளிநாயகி :—" என்னடி ! நம்மைப்போலுள்ள இளவயதுக் காரிகள் ஒரு இளம் புருஷருக்கு லிகிதம் வரைவதென்ருல் நன்ருயிருக்கிறதா? நம்மைக்காக்கக் கூடிய அரசராயிருப்பதால் எழுதலாமென்ருலும், இது ஒரு வகையான காரியத்தைப் பற்றி வந்ததாகும். ராஜி! நீ இதை வேறு ஒருவரிடத்திலும் சொல்லவேண்டாம். இவையெல்லாம் பெண்களாலேயே உண்டான ஆபத்துகள்."

* * * *
* * * *

இவர்கள் பேசுவதைவிட்டு, இனி செட்டியாரைப் பார்க்கவந்தவர் சங்கதியைக் கவனிப்போமாக.

சிறிது நேரத்திற்குள் செட்டியார் சாப்பாட்டு வேலையை முடித்துக்கொண்டு வெளியே வந்தார். முன், செட்டியாரைப்பற்றிக் காவலனிடம் விசாரித்தவர், அவரைக் கண்டவுடன் எழுந்து நமஸ்காரம் செய்தார். செட்டியாரும் பிரதி நமஸ்காரஞ் செய்து, "தாங்கள் எவ்விடம்? தெரியவில்லையே!" என்ருர்.

வந்தவர்:—"நானிருப்பது மதுரை. இராவன்ஞ-மாஞ; ஆவன்ஞ-இழ்ழன்ஞ; ஆஞ-ரீஞ; ஆஞ-ழாஞ; சீயன்ஞ-நீஞ நாராயண செட்டி என்பது